25th September 1961]

அவை அவர்களுக்கு சர்க்காரால் பட்டா செய்து கொடுக்கப்படும் என்று எதிர்க்கட்சிக்காரர்கள் பகிரங்கமாகக் கூட்டங்களில் பேசி அவர்களைத் தூண்டி விடுகிறார்கள் என்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. A MANICKAVELU : ஆமாம். சிலருக்கு வேறுவிதங்களில் கிளர்ச்சி செய்வதற்கு சௌகர்யம் இல்லை. ஆகவே இந்த வகையிலாவது தங்களுக்கு உபயோகப்படும் வகையில் கிளர்ச்சி நடத்தலாமே என்று நடத்துகிறார்கள்.

SRI A. GOVINDASAMY : ஆளுகின்ற கட்சிக்காரர்கள் இந்தப் புறம்போக்கு நிலங்களில் இவர்கள் வந்து ஆக்கிரமித்துக்கொள்வதற்கு விடக் கூடாது என்று அடிக்கடி வந்து புகார் செய்து கொண்டிருக்கிறார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A MANICKAVELU : அப்படிக் கிடையாது. அரசாங்கமே இந்தமாதிரி காரியங்களில், கொடுக்கக்கூடிய நிலங்களைக் கொடுத்து வருகிறார்கள். சமுதாயத்திற்குப் பொதுவாக இருக்கக்கூடிய ஏரிப் புறம்போக்கு, ஓடைப் புறம்போக்கு இவை கொடுக்கப்படுவதில்லை. கொடுத்தால் பல ஆயக்கட்டுகள் பாதிக்கப்படும்.

SRI T. IRUSAPPAN : தலைவர் அவர்களே, ஓடைப்புறம் போக்கு, ஏரிப் புறம்போக்கு என்று சொல்லுகிற நிலத்தில் பலகாலமாகப் பயிர் செய்து வந்திருக்கிறார்கள். இன்றைய தினம் பஞ்சாயத்து யூனியன்கள் வந்த காரணத்தினால் அவர்கள் வெளியேற்றப்படுகிறார்கள். அதைத் தடுத்து நிறுத்தி அவர்களுக்கே பட்டா வழங்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நான் முன்பே சொன்னேன். சமுதாயத்திற்கு விரோதமான அளவில் நிலங்களை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தால் அதை ஒத்துக்கொள்ள முடியாது. அதுவும் இந்தக் காலத்தில் ரொம்ப ஏழை எளியவர்களைப்பற்றிப் பேசப்படுகிறது.

SRI D. S. AUTHIMOOLAM : ஓடைப்புறம்போக்கு, ஏரிப்புறம் போக்கு இவை சம்பந்தமாக பட்டா செய்வதற்கு ரெவின்யூ போர்டின் ஸ்டாண்டிங் ஆர்டர் குறுக்கே நிற்கிறது. அது மிகப் பழங்காலத்தில் ஏற்படுத்தப்பட்டது. ஆகவே அதை இப்போதுள்ள சூழ்நிலையில் திருத்தி அமைக்க பரிசீலனை செய்யப்படுமா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : பழைய ஸ்டாண்டிங் ஆர்டர் குறுக்கே நிற்பது நல்லது தான். ஏரி எதுவாய், குள எதுவாய் இதுவெல்லாம் ஆக்கிரமித்துக்கொள்ளப்படுவது விவசாயத்திற்கே மிகவும் பாதகமானது.

SRI M. KULANDAISAMI GOUNDER : புறம்போக்கு நிலங்களில் பத்து வருஷம், இருபது வருஷமாக குடியிருந்தோ, விவசாயம் செய்தோ அனுபவித்து வருகிறவர்களுக்கு இன்னும் அவை பட்டா செய்யப் படாமல் இருக்கிறது. உடனடியாக அவற்றைப் பட்டா செய்து கொடுப்பார்களா என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : இந்தக் கேள்வி ஒரு குறிப்பிட்ட இடத்தைப் பற்றியது, ஆனால் பொதுவாக சரமாரியாக் கேள்வி கேட்டுக்கொண்டே போனால் என்ன பண்ணுவது ? . . .

*Medical education—Grant from Government of India*

* 1803 Q.—SRI—M. D. THIAGARAJA PILLAI (On behalf of SRI N. R. THIAGARAJAN) : கனம் ரெவின்யூ அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சென்ற நான்காண்டுகளில் மத்திய சர்க்காரிலிருந்து வைத்தியக் கல்விக்காக ஒதுக்கப்பட்ட மான்யம் ஏதாவது செலவு செய்யப்படாமல் விடப்பட்டதா ? அப்படியானால் எவ்வளவு ?

THE HON. SRI M. A. MANICKAVELU : No, Sir.